Phone: No. 2241

Regd. No. M. 5934

**கனத்த மழை பெய்யலாம்**

சென்னை, மே 7—

இன்று சென்னை, கேரளம், ஆந்திரத்தின் தெற்குக் கடற்கரை, ராயலசீமை, மைசூரின் தெற்கு பகுதிகள், கடற்கரைப் பகுதிகளில் கனத்த மழை பெய்யக் கூடும் என்று சீதோஷ்ண நிலை ஆராய்ச்சியாளர் டி. பி. ராவ் கூறுகிறார்.

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர்.ப.ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை அணா 1 [இதழ் 258

சென்னை 7-5-58 விளம்பி, சித்திரை-24 புதன் (வெளியூர் 8-5-58 விளம்பி, சித்திரை-25 வியாழன்)

**டாக்டர்கள் ஸ்ட்ரைக்! நோயாளிகள் ஆதரவு**

வியன்னா, மே 5—

சம்பள உயர்வு கோரி இங்கு எல்லா ஆஸ்பத்திரிகளிலுள்ள டாக்டர்களும் ஒரு வாரமாக ஸ்ட்ரைக் செய்து வருகின்றனர். இவர்களுக்கு ஆதரவாக ஒரு ஆஸ்பத்திரியிலுள்ள 10 நோயாளிகள் உண்ணாவிரதத்திலிறங்கியுள்ளனர்.

# காங்கிரஸ் கட்சியின் நாடி விழுகிறது

## ஆதரவு குறையக் குறைய பித்தலாட்டங்கள் அதிகரிக்கின்றன

### தேவிகுளம் உபதேர்தல் நிலைமை

(நமது விசேஷ நிருபர்)

மூணார், மே 2—

கேரளத்தில் தேவிகுளம் உபதேர்தலில், காங்கிரஸ் கட்சிக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் போட்டி தீவிரமாகி வருகிறது. மே மாதம் 16ம் தேதி தேர்தல் நடக்கப்போகிறது. இந்தத் தொகுதி இந்தியாவிலேயே பெரிய தொகுதி என்று கூறுகிறார்கள். சுமார் 1½லட்சம் வாக்காளர்களைக்கொண்டது, இவர்களில் தோட்டத் தொழிலாளர்கள்தான் அதிகம். சுமார் 60 ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் தொழிலாளர்களும் வாக்காளர்களாக இருக்கிறார்கள். மே முதல் தேதியிலிருந்து தேர்தல் இயக்கம் சூடுபிடித்துவிட்டது.

**காங்கிரஸ் நிலை**

காங்கிரஸ் அபேட்சகர் பி. கே. நாயருக்கு ஆதரவுதேட கேரள காங்கிரஸ் தலைவர்களும், தமிழ் நாட்டு காங்கிரஸ் மந்திரிகளும் தலைவர்களும் தீவிர வேலைசெய்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் அநேகமாக பொதுக்கூட்டங்களே நடத்துவதில்லை. பத்தாயிரக்கணக்கான ஏக்கர் தோட்டங்களை வைத்துக்கொண்டு கேரள ராஜ்யத்தில் ஒரு தனி ராஜ்யம் நடத்தும் வெள்ளைக்கார கண்ணன்தேவன் கம்பெனி முதலாளிகளை காங்கிரஸ் கட்சியினர் அடிக்கடி சந்திக்கிறார்கள். தங்குமிடம் போன்ற வசதிகளும் அவர்களுக்கு கிடைக்கின்றன. தொழிலாளர்கள் வேலை செய்யுமிடங்களில் வேலை நேரத்தின்போது, கண்டு பேசி காங்கிரஸுக்கு ஆதரவு தேட, காங்கிரஸ் கட்சியினருக்கு கண்ணன் தேவன் கம்பெனிக்காரார்கள் அனுமதி கொடுக்கிறார்கள். அதிகச் சம்பளம் வாங்கும் தோட்ட உத்தியோகஸ்தர்கள் பலர் ஓட்டு சேகரிக்க கிளம்பியிருக்கிறார்கள்.

**இந்திரா விஜயம் ஏமாற்றம்**

ரொம்பவும் பிரயாசைப்பட்டு இந்திரா காந்தியைக் கொண்டு வந்து தேவிகுளத்தின் தலைநகரான மூணாரில் ஒரு கூட்டத்தில் பேசச் செய்தார்கள். அதற்காக 10 நாட்களாக, 'ஆசியாவின் அரும்பெரும் ஜோதி பண்டித நேருவின் திருக்குமாரி இந்திரா வருகிறார்' என்றெல்லாம் ஆர்ப்பாட்டமாக விளம்பரம் செய்தார்கள்; 10 நாட்களாக ஜீப் கார்களில் மைக் வைத்துப் பிரச்சாரம் செய்தார்கள். ஆனால் இவ்வளவு ஆர்ப்பாட்டமாக விளம்பரம் செய்யப்பட்ட அந்த அம்மையாரின் கூட்டத்துக்கு 3000 மக்களே கூடினார்கள். 3000 பேர் மட்டும் தான் வந்தார்கள் என்பது மட்டுமல்ல. ஆளைப் பார்த்தவுடன் பெரும்பகுதி கூட்டமும் கலைந்து விட்டது. இதனால் காங்கிரஸ் கட்சியினருக்கு ஒரே ஏமாற்றமாகி நாடி விழுந்துவிட்டது.

**10 ஆண்டு லீலைகள்பற்றி எக்கச்சக்க கேள்விகள்!**

இதுமட்டுமல்ல, பி. கே. நாயர் ஆட்கள் எந்தத் தோட்டத்தில் போய் தொழிலாளிகளிடம் ஓட்டுக் கேட்டாலும்; எல்லா இடங்களிலும், "உங்கள் மாட்டுக் கட்சி 10 வருஷங்களாக ஆட்சி நடத்தியதே, எங்களுக்கு என்ன நன்மை செய்தீர்கள்? ஒன்றுவது சொல்லுங்கள்" என்று தொழிலாளர்கள் கேள்வி கேட்கிறார்கள், போலீஸ் உதையை நிறுத்தினீர்களா? எங்களுக்கு சம்பள உயர்வு கிடைக்க காங்கிரஸ் சர்க்கார் என்ன செய்தது? போனஸ் கொடுக்காத காலங்களில் சர்க்கார் தலையிட்டு, கொடுபடாத வருஷங்கள் அத்தனைக்கும் வாங்கிக் கொடுத்ததா? மூணாரில் தமிழர் கடைகளை இடித்தவர்கள் நீங்கள்தானே! உங்களை முதலாளிகளெல்லாம் ஆதரிப்பது ஏன்? கண்ணன்தேவன்கம்பெனி உங்கள் கூட்டங்களைத் தோட்டங்களில் நடத்த அனுமதி கொடுத்தும், அதே சமயத்தில் கம்யூனிஸ்ட் கூட்டங்களை அனுமதிக்க மறுத்தும் வருவதின் காரணமென்ன?" இதுபோன்று இன்னும் எவ்வளவோ கேள்விகளைக் காங்கிரஸ்காரர்களிடம் எக்கச்சக்கமாகக் கேட்டு திக்குமுக்காடச் செய்கிறார்கள். இதுவும் காங்கிரஸ் கட்சியை சோர்வடையச் செய்துவிட்டது.

இந்திரா காந்தி இத்தோட்டப் பகுதிகளுக்கு தேர்தல் விஷயமாக விஜயம் செய்தபோது, கண்ணன் தேவன் கம்பெனியார் வழியெல்லாம் அலங்கார வேலைகள் செய்தார்கள். மேடை அலங்காரங்களையும்செய்து ஒத்துழைப்புக்கொடுத்தார்கள். தொழிலாளர்களுக்கு சம்பளத்துடன் விடுமுறையும் விட்டார்கள்

**மே தினத்துக்கு சம்பள லீவு இல்லை**

ஆனால் மே தினத்துக்கு சம்பளத்துடன் லீவு விடவேண்டுமென்று கேரள அரசாங்கம் உத்தரவிட்டும் கூட, அந்த உத்தரவை மதிக்காமல், சம்பள லீவு தரவில்லை.

**ஜம்பம் சாயவில்லை**

என்றாலும் ரோஸம்மா புன்னூஸை தலைவராகக் கொண்ட

(2-ம் பக்கம் பார்க்க)

## என். ஜி. ஓ. ஸ்ட்ரைக் நடந்தேதீரும் சர்க்காரின் பயமுறுத்தல் பலிக்காது

### பழிவாங்கப்பட்டவர்களுக்கு சங்கம் நிவாரணமளிக்க என். ஜி. ஓ. சங்க முடிவு

சென்னை, மே 7—

உத்தேச என். ஜி. ஓ.க்களின் வேலை நிறுத்தம் நடைபெறுமானால் அதில் கலந்து கொண்டவர்களை 'சஸ்பெண்ட்' செய்வது உள்பட கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்று சென்னை சர்க்கார் பிரதம காரியதரிசி சத்தியநாதன் பயமுறுத்தியுள்ளார். வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்படவில்லையென்றால் செக்ரடேரியட் சங்கத்திற்கு அளிக்கப்பட்டுள்ள அங்கீகாரத்தையும் சர்க்கார் ரத்து செய்ய நேரிடும் என்றும் சத்தியநாதன் கூறியுள்ளார். இதுதவிர வேலை நிறுத்தம் நடைபெறும்போது கருங்காலிகளாக வேலை செய்வதற்கு வேலை தேடித்தரும் ஸ்தாபனம் மூலம் புதிய ஆட்களைத் தயாரித்து வைக்கும்படியும் சர்க்கார் உத்திரவிட்டுள்ளதாம்.

**வேலை நிறுத்தம் உறுதி**

இவ்விதம், வேலை நிறுத்தம் செய்வோர் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று சர்க்கார் எச்சரித்திருந்தும், வேலை நிறுத்தத்தை நடத்தியே தீருவது என்று என். ஜி. ஓ. சங்கம் உறுதி பூண்டுள்ளது. சென்னை செக்ரடேரியட் சங்கத்தின் பொதுக்குழுக் கூட்டம் நேற்று கூடியபோது, தங்கள் குறைகளை தீர்க்க உருப்படியான யோசனைகளைத் தெரிவிக்க சர்க்கார் முன்வரவில்லையெனில், 15-ம் தேதி ஒரு தின அடையாள வேலைநிறுத்தத்தை திட்டமிட்டபடி நடத்தியே தீருவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இதேபோன்ற ஒரு தீர்மானத்தை சென்னை ராஜ்ய என். ஜி. ஓ. கள் சங்கம் சமீபத்தில் நிறைவேற்றியது நினைவிருக்கலாம்.

**அஞ்சாதீர்**

செக்ரடேரியட் சங்கக் கூட்டம் நேற்று நடைபெற்றபோது, சங்கத் தலைவர் டி. ரெங்கநாதன் பேசுகையில் தங்கள் குறைகளை தீர்ப்பதற்கு பதிலாக சர்க்கார் வஞ்சம் தீர்க்க வரிந்துகட்டி வருவது வருந்தத்தக்கது என்றார்.

அடுத்து சென்னை ராஜ்ய என். ஜி. ஓ. சங்கத் தலைவர் ஆழ்வாரப்பன் பேசுகையில் சர்க்காரின் பயமுறுத்தலைக் கண்டு அஞ்சவேண்டியதில்லை என்றும், சங்கத்திடம் ரூ. 4 லட்சம் நிதி இருக்கிறதென்றும், பழிவாங்கப்பட்ட என். ஜி. ஓ. க்களுக்கு இந்த நிதியிலிருந்து நிவாரணம் அளிக்கப்படும் என்றும், ஆகவே உரிமைகளைப்பெற அஞ்சாது போராடும்படியும் கேட்டுக் கொண்டார்.

மற்றும் டி. வரதராவ், சி. பி. ராஜ், ஆர். சந்தானம், ஆர். ராஜகோபாலன் ஆகியோர் வேலை நிறுத்தம் செய்வதென்ற தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்து பேசினர்.

## காங்கிரஸ் மந்திரிகள் தேர்தல் பிரசாரம் செய்ய வருவது நேர்மையல்ல

### கேரள ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி கண்டனம்

சென்னை, மே 7—

"கேரள ராஜ்ய கம்யூனிஸ்டு மந்திரிகள் தேவிகுளம் தேர்தல் பிரசாரத்தில் கலந்து கொள்ளக் கூடாது, என்று கேரளக் கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்துள்ளது. இங்கிலையில் மத்திய சர்க்கார் மந்திரிகள் அங்கு காங்கிரஸ் அபேட்சகருக்கு ஆதரவாகத் தேர்தல் பிரசாரத்திற்கு வருவது நேர்மையல்ல".

இவ்வாறு கேரள கம்யூனிஸ்ட் கட்சியின் காரியதரிசி தோழர் எம். என். கோவிந்த நாயர் (எம். பி.,) நேற்று பத்திரிகை நிருபர் கூட்டத்தில் குறிப்பிட்டார்.

மத்திய சர்க்கார் மந்திரிகள் திரு. எஸ். கே. பாட்டீல் ஏ. எம். தாமஸ் ஆகியோர் தேவிகுளத்திற்கு வரப்போவதாக பத்திரிகைகளில் வந்துள்ள செய்தியைப் பற்றி பத்திரிகை நிருபர்கள் கேட்டதற்கே எம். என். கோவிந்த நாயர் அவ்வாறு குறிப்பிட்டார்:

கேள்வி: காங்கிரஸ் மந்திரிகள் அங்கு பிரசாரத்திற்கு வருவதினால், உங்கள் மந்திரிகள் அங்கு போகக்கூடாதென்ற உங்கள் முடிவை நீங்கள் மாற்றிக் கொள்ளப் போகிறீர்களா?

பதில்: நாங்கள் எங்கள் முடிவை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. ஏனெனில் மந்திரிகள் ஒரு உப-தேர்தலில் தேர்தல் பிரசாரத்திற்குப் போகக் கூடாது என்ற கொள்கையின் அடிப்படையில் நாங்கள் நிற்கிறோம். பொதுத் தேர்தல் என்றால் அது வேறு விஷயம்.

எங்கள் முடிவைப்பற்றி தந்தி மூலம் நாங்கள் பிரதமர் நேருவுக்கும், தேபருக்கும், தேர்தல் கமிஷனுக்கும் அறிவித்துள்ளோம்.

கேள்வி: அவர்கள் காங்கிரஸ் தலைவர்கள் என்ற முறையில் அங்கு பிரசாரத்திற்கு வருவதில் தவறென்ன?

பதில்: காங்கிரஸ் தலைவர்கள் வருவதைப்பற்றி நாங்கள் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் மந்திரிகள் வருகை தான் சரியல்ல என்று நாங்கள் கூறுகிறோம். அவர்கள் பிரசாரத்தின் போது, கேரள சர்க்காரின் நிர்வாகத்தைப் பற்றியும் குறைகூறிப் பேசத்தான் போகிறார்கள்.

கொஞ்ச காலத்திற்கு முன்னால் முதுகுளத்தூர் சம்பவங்களைப் பற்றி எங்கள் நிதிமந்திரி அச்சுத மேனன் ஏதோ கூறியதற்கு, ஒரு ராஜ்யத்தின் மந்திரி இன்னொரு ராஜ்யத்தின் நிர்வாகத்தைப் பற்றி விமர்சனம் செய்வது சரியல்ல என்று சென்னை மந்திரி கனம் சுப்ரமண்யம் தெரிவித்தார்.

அந்த வாதம் சரியானதென்றால் இன்றைக்கும், காங்கிரஸ் மந்திரிகளுக்கும் அது பொருந்தவேண்டும்.

ஆகவே, கக்கன் போன்ற சென்னை மந்திரிகளும் அங்கு வருவது கொஞ்சமும் முறையல்ல

கேள்வி: இந்திரா காந்தியின் காரை கம்யூனிஸ்டுகள் வழிமறித்தார்கள் என்பது உண்மையா?

பதில்: அத்தகைய சம்பவம் எதுவும் நடைபெறவில்லை. இந்திரா காந்தியின் காருக்கு முன்னே பி. கே. நாயரும் (காங்கிரஸ் அபேட்சகர்) இன்னும் சிலரும் ஒரு காரில் வந்துகொண்டிருந்தனர். அப்பொழுது சில தொண்டர்கள் "இங்குலாப் ஜிந்தாபாத்" என்று கோஷமிட்டனர். அவ்வளவுதான்.

கேள்வி: கேரளத்தில் சட்ட

(2-ம் பக்கம் பார்க்க)

## கேரள தமிழருக்கு சம அந்தஸ்து

### தமிழ்ப் பகுதியில் தமிழ் பேசும் உத்தியோகஸ்தர்கள்

**கேரள சர்க்காரின் வழிகாட்டும் நடவடிக்கை**

திருவனந்தபுரம், மே. 6—

கேரளத்தில், மலையாளத்தோடு தமிழையும், கன்னடத்தையும் பிராந்திய மொழிகளாக கேரள சர்க்கார் அங்கீகரித்துள்ளது.

இதனையொட்டி கேரள சர்க்கார் பல்வேறு இலாகாத் தலைவர்களுக்கும் புதிய உத்திரவு ஒன்றை பிறப்பித்துள்ளது. அதாவது தமிழ்ப்பேசும் பகுதிகளில் தமிழ் உத்தியோகஸ்தர்களையும், கன்னடம் பேசும் பகுதிகளில் கன்னட உத்தியோகஸ்தர்களையும் நியமிக்கும்படி சர்க்கார் தெரிவித்துள்ளது. அப்போதுதான் அந்த அதிகாரிகள் ஸ்தல மக்களோடு நெருங்கிப் பழகி அவர்களது குறைகளைத் தீர்க்க முடியும் என்று சர்க்கார் சுட்டிக் காட்டியுள்ளது.

# ஜனசக்தி

சென்னை 7-5-1958


## வரட்சிப் பாதை

சோஷலிஸ்ட் ஐக்கியம் என்று சில தினங்களாகப் பத்திரிகைகளில் சண்டப்பிரசண்டம் செய்யப்பட்டது. மாப்பிள்ளை இல்லாத கல்யாணம் போல இடதுசாரி இயக்கத்தின் ஈட்டி முனையான சோஷலிஸ்ட் இயக்கத்தின் அடிவேரான கம்யூனிஸ்ட் கட்சியைப் புறத்தே வைத்துவிட்டு மற்றவர்கள் சோஷலிஸ்ட்களும்-அல்லாதவர்களும் கூடிக் குலவையிட்டு ஐக்கிய சோஷலிஸ்ட் என்ற அமைப்பை நிறுவப் பகீரதப் பிரயத்தனம் நடந்தது.

கம்யூனிஸ்ட் கட்சி நாளொருமேனியாகப் பலம் பெற்று வரும் இந்தக் கட்டத்தில் அதன் செல்வாக்கு ஓங்கி உயர்ந்து வரும் சந்தர்ப்பத்தில் சோர்ந்து ஓய்ந்து போன மாஜி இடதுசாரிகள் கலக்கமடைவது இயல்பே. எனவேதான் கம்யூனிஸ்ட் எதிர்ப்பை முதலீடாக வைத்துச் சில அமைப்புகளை நிறுவ முயல்கின்றனர். காலம் அவர்கள் முயற்சிக்குப் படுதோல்வியை அளிக்கிறது. கம்யூனிஸ்ட்-எதிர்ப்புக் கொடி கந்தலாகிப் பிய்ந்து போய் மாசு படிந்து கிடக்கிறது.

பி. சோ. கட்சியைப் பொறுத்தவரையில் இருதலைக் கொள்ளி எறும்பு போலத் திண்டாட்டம் ஏற்பட்டிருக்கிறது. ஒருபுறம் இந்தியாவின் பிற்போக்குப் பொருளாதாரம் பற்றிச் சித்தாந்தம் பேசி, இதன் நிர்ப்பந்தத்தால் காங்கிரஸுடன் கூட்டுச் சேர வேண்டும் என்று அசோக் மேத்தா போன்றோர் வாதிக்கிறார்கள். மறுபுறம் இடதுசாரி வேஷத்தில் ஆனால் யதார்த்தத்தில் சீர்குலைவுப் போக்கில் உள்ள லோஹியா கொள்கை காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் இரண்டிலிருந்து ஒருசேர எட்டி விலகி நிற்பது என்ற போக்கு. இதனால் ஏற்பட்ட பிரிவின் விளைவாக பி. சோ. கட்சியும், லோஹியா கட்சியும் பலவீனமடைந்துள்ளன.

பார்லிமெண்டில் உள்ள பி. சோ. உறுப்பினர்கள் ஆசார்ய கிருபளானி தலைமையில் ஒரு ஐக்கிய சோஷலிஸ்ட் கட்சி என்ற அவியல் கட்சியை அமைக்க முயல்கிறார்கள். பி. சோ. தொட்டு ஒரிஸா மாஜி மன்னர்களான கண தந்திர பரிஷத், ஆர். எஸ். பி., பார்வேர்ட் பிளாக், லோக சேவக் சங்கம், விவசாயிகள் தொழிலாளர் கட்சி, சம்யுக்த மகாராஷ்டிர சமிதி, மகா குஜராத் பரிஷத் இரண்டையும் சேர்ந்த சுயேச்சையினர் இவர்களைச் சேர்க்க முயல்கின்றனர்.

பி. சோ. இவ்வாறு முன்வருவதில் அதிசயப்படவேண்டாம். ஒரிஸா மன்னர்கள் கட்சியுடன் திட்ட உடன்பாடு செய்து கொண்டுள்ள இவர்கள் எதைத்தான் செய்ய மாட்டார்கள். கேரளத்தில் காங்கிரஸுடன் ஒன்று சேர்ந்து ஜனநாயகத்தைக் காப்பாற்ற கம்யூனிஸ்ட்களை எதிர்க்கிறார்கள். வகுப்புவாத முஸ்லீம் லீக் மேடையில் பட்டம்தாணுப் பிள்ளையும், கே. பி. மேனனும் பேசுகிறார்கள்.

200 வருட வரலாற்றில் கம்யூனிஸ்ட் கட்சி போல மோசமான ஆட்சி இருக்கவில்லை என்று பிரிட்டிஷ் ஆட்சிக்கே நற்சாட்சியளிக்கிறார் தாணுப் பிள்ளை.

கொள்கை கோட்பாடற்று கம்யூனிஸ்ட் எதிர்ப்புடன் பிறந்த கட்சிகள் வாழ்ந்ததில்லை, ஒவ்வொரு தடவையும் தோல்வியே அடைந்து வந்துள்ளன. கிஸான் மஜ்தூர் பிரஜா கட்சியும் சோஷலிஸ்ட் கட்சியும் பி. சோ. வாகச் சேர்ந்த பொழுது சற்றே பலமடைந்தார்கள். ஆனால் கம்யூனிஸ்ட் எதிர்ப்பில் காலிடறத் தொடங்கியவுடன் பலவீனப் படலமும் தொடங்கியது.

இவ்வாறு சில முயற்சிகள் நடத்தப்படும் கட்டத்தில் தான் ஜெயப்பிரகாஷ் நாராயண் பி. சோ. காங்கிரஸுடன் இணைய வேண்டுமென்று கூறலானார். பிறகு சற்றே திருத்திக் கொண்டு இதர ஜனநாயக சோஷலிஸ்ட் கட்சிகளின் ஆதரவையும் ஒத்துழைப்பையும் காங்கிரஸ் பயன்படுத்த முன்வர வேண்டும் என்றார். ஜே. பி. யின் யோசனை நடவாது என்று நேரு கூறிவிட்டார்.

அதிகார போதையில் மமதையுடன் இயங்கும் காங்கிரஸ் தலைவர்களுக்கு தேசிய ஐக்கியம் கோரும் இடதுசாரிகளை வெறும் கிள்ளுக்கீரையாகக் கருதுவது வழக்கமாகிவிட்டது இவர்களுக்குச் சுடச்சுட மறுமொழி அளிக்க வேண்டுமானால் தேசிய ஐக்கியததை உரமிட்டு வளர்க்கும் உத்தேசத்துடன், எதிர்க் கட்சிகள் கொள்கை, கோட்பாடுகளுடன் ஒன்று சேர்ந்து போராட வேண்டும். உறுதியான தன்மான உணர்ச்சியைப் பிரதிபலிக்க வேண்டும்.

கொள்கை கோட்பாடற்ற ஒரு கம்யூனிஸ்ட் எதிர்ப்பு முன்னணியை உருவாக்கும் அவலப் பாதையில் பி-சோ. இறங்கியுள்ளது. ஆனால் இதே கட்டத்தில் கம்யூனிஸ்ட்கட்சி உருப்படியாக இடதுசாரி ஐக்கியத்தைக் கட்டி வளர்க்க அறைகூவியுள்ளது. நம்மிடை உள்ள வேற்றுமைகளை குறைத்து மதிப்பிடவில்லை. மனப்பூர்வமாகவும் கொள்கை அடிப்படையிலும் சகோதர உணர்ச்சியுடன் நம்மிடையே உள்ள வேற்றுமைகளைப்பற்றி விவாதிக்க நாங்கள் விரும்புகிறோம்.

பொதுமக்களுக்கு சேவைஎன்ற பொதுமண்டலத்தில் கூட்டாகப் பணிபுரிவோம் காங்கிரஸின் பிற்போக்குக் கொள்கைகளை மாற்றப் போராடுவோம். இவை யதார்த்த சோஷலிஸ்ட் ஐக்கியத்திற்குப் பாதை சமைக்கும்; அரசியல்பருவநிலையை மாற்ற உதவும் இந்திய மக்களின் வாழ்வில், நல்வாழ்வுக்கான இயக்கத்தில் மகத்தான மாறுதல்களைக் கொண்டுவரும்.

## ஆலங்குடி வட்ட கிராம வளர்ச்சிக் குழு

காரைக்குடி, ஏப் 29—

தேசிய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் பல வேலைகளைத் திட்டமிடவும், நிறைவேற்றவும் ஆலங்குடியைச் சுற்றுமுள்ள கிராமங்களின் கிராம வளர்ச்சிக் குழு தேர்தல் நடைபெற்றது. எஸ். நாராயணன், கரு. பழனியப்பன், அண. ராமசாமி, அரு. சின்னையாக் கோனார் முதலிய 9 பேர் கொண்ட குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. எஸ நாராயணன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## காங்கிரஸ் கட்சிக்கு ஒரு சட்டம்? மற்ற கட்சிகளுக்கு வேறு சட்டமா?

சென்னை, மே 4—

சென்னை நுங்கம்பாக்கம் நியூ டாங்க் ரோடில் 3-5-58-ல் நடைபெற்றசுதந்திர இளைஞர்சங்க இரவுப்பள்ளி 9-வது ஆண்டுவிழா பொதுக்கூட்டத்தில் மாலை 5மணியிலிருந்து இரவு 7-30 மணிவரை தொடர்ந்து இசைத்தட்டுகள் போடப்பட்டு, பிறகு 7-40மணிக்கு கூட்டம் ஆரம்பித்தார்கள்.

காங்கிரஸ்காரர்கள் உள்ள மன்றங்களுக்கு மட்டும் விசேஷ சலுகை சென்னை போலீசாரால் காட்டப்படுவானேன்? மாற்றுக் கட்சி மன்றங்கள் கூட்டங்களில் இசைத் தட்டுகளை உபயோகப் படுத்துவதற்குப் போலீசார் தடை விதிப்பது ஏன்?

இசைத்தட்டை அனைவரும் கூட்டங்களில் உபயோகிக்க அனுமதிப்பதே நீதி! போலீசார் கவனிப்பார்களா? —கே. முருகேசன்.

(4ம் பக்கத் தொடர்ச்சி)

4. பார்லிமெண்டு கமிட்டிக்கு முக்கியமான சகல பிரச்சினைகளிலும் செயற்குழுவும் ம. நிர்வாகக்கமிட்டி வழிகாட்டுவது.

5. விவசாய இயக்கத்தில் தீவிர கவனம் செலுத்த ஒரு உப கமிட்டி நியமிப்பது.

7. சமாதான இயக்கத்திற்கு முக்கிய கவனம் செலுத்துவது.

8. பெண்கள், மாணவர்கள், வாலிபர் இயக்கங்களுக்கு ராஜ்யக் கமிட்டிகள் பிரதான கவனம் செலுத்துவதுடன் 'சென்டர்' அகில இந்திய ரீதியில் இந்தத் துறைகளில் பணியாற்றும் தோழர்களை அழைத்துப் பேசுவது.

9. சென்டருக்கும் ராஜ்யங்களுக்குமிடையே நல்ல தொடர்பு ஏற்படுத்துவதுடன் தேவையான சமயங்களில் நேரடி உதவியும் அளிக்கவேண்டும்.

10. மார்க்ஸிஸம் லெனினிஸத்தை இந்த நாட்டின் சூழ்நிலைக்கேற்ப அமுலாக்கும் நமது கட்சியின் திட்டத்தை துரிதமாக வெளியிடுவது

11 கட்சியின் சரித்திரத்தை எழுதி வெளியிடுவது.

12. கட்சியின் தலைமைக் காரியாலயங்களைமுறையாக அமைத்து அதன் வேலைகளைத் தீவிரமாக்குதல்.

இத்தகைய கடமைகளை வரையறுத்துக் கூறியதுடன் கட்சியில் நிறைய பாட்டாளி மக்களைச் சேர்த்து கட்சியின் பாட்டாளி வர்க்கத் தன்மையை அதிகரிக்க வேண்டும் எனவும் கட்சி முழுதிலும் கூட்டாக முடிவெடுத்தல், இயங்குதல், தனிநபர்களுக்குப் பொறுப்பளித்தல், அத்தகைய பொறுப்பு நிறைவேற்றப்பட்டதா என பரிசிலனை செய்வது ஆகிய நமது இயக்க நடைமுறைகளை தீவிரமாக அமுல்நடத்த வேண்டும் என்றும் தோழர் அஜய் வற்புறுத்தினார். அடுத்த ஓராண்டில் கட்சிப் பத்திரிகைகளின் எண்ணிக்கையை இரட்டிப்பது, புதிய புதிய பிரதேசங்களுக்கு கட்சி செல்லுதல், கட்சிக்குள் கல்லாமையை அடியோடு ஒழித்தல், தொழிற்சங்க விவசாய சங்கங்களில் திட்டமிட்டு அதிக உறுப்பினர்களைச் சேர்த்தல் போன்ற கடமைகளையும் அவரது ரிப்போர்ட் முன்வைத்தது.

இதன்பேரில் 1½ நாட்கள் விவாதம் நடந்தது. பல தோழர்கள்பல அரிய ஆலோசனைகள் தந்தனர். இவைகளை எல்லாம் கணக்கில் எடுத்துக்கொண்டு புதிய ஸ்தாபனத் தீர்மானம் திட்டப்பட்டது.

மற்ற கட்சிகளைப்போலல்லாது பாட்டாளிவர்க்க முன்னணிப் படை தனது ஸ்தாபனத்தை எவ்வாறு அமைத்துக்கொள்கிறது என்பதற்கு தோழர் அஜயின் ரிப்போர்டும் அதன் பேரில் தரப்பட்ட ஆலோசனைகளும், எடுத்த முடிவுகளும் தக்க உதாரணங்கள். விமர்சனம், சுய விமர்சனம் என்பதே இதன் அடிப்படை. இன்று ஆளும் கட்சியோ, வேறு கட்சியோ இந்த விதத்தில் தைர்யமாக விமர்சனம், சுய விமர்சனத்தை மேற்கொண்டதுண்டா? என்று கேட்கிறோம்.

—கே. முத்தையா.

## காங்கிரஸ் கட்சியின் . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தேவிகுளம் தோட்டத் தொழிலாளர் சங்கம், 'மே தினத்துக்கு சம்பளத்துடன்' விடுமுறை விடுமாறு சர்க்கார் உத்திரவிட்டிருப்பதால் யாரும் வேலைக்குப் போகாதீர்கள் என்று பிரச்சாரம் செய்தது. இதை முறியடிக்க கண்ணன் தேவன் கம்பெனியும், பி. கே. நாயரின் ஐ. என். டி. யு. சி. சங்க ஆட்களும் பெரு முயற்சி செய்தார்கள். "மே தினத்துக்கு சம்பளத்துடன் லீவு விட சர்க்கார் சொல்லவில்லையென்றும், இதுதானா கம்யூனிஸ்ட் சர்க்காரின் தொழிலாளர் சேவை" என்றும் தோட்டங்களில் பிரச்சாரம் செய்து, வேலைக்குச் செல்லுமாறு தூண்டினார்கள். ஆனால் அவர்களின் முயற்சி படுதோல்வி அடைந்தது. ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லாமல் 10, 15 மைல் தூரத்தில் பல மலைகளுக்கும் அப்பாலிருந்துகூட செங்கொடிகளைப் பிடித்துக் கொண்டு ஊர்வலமாக வந்து மூனார் மே தின ஊர்வலத்திலும் பொதுக் கூட்டத்திலும் கலந்து கொண்டார்கள். இதனாலும் காங்கிரஸ் கட்சியின் நாடி விழுந்து விட்டது.

மக்களைத் திரட்டி பொதுக் கூட்டங்கள் நடத்த காங்கிரஸ் கட்சிக்குப் பயமாக இருக்கிறது. காரணம் கூட்டத்துக்கு ஆள் சேராது போனால், தேர்தலுக்கு முன்னாலேயே தோற்றுப்போக நேரிடுமே என்று அச்சம்தான்,

### அவதூறும் பொய்களும்

இதனால் காங்கிரஸ் கட்சியினருக்கு ஆத்திரம் ஏற்பட்டு, அவதூறுகளையும் பொய்களையும் பொழியத் தொடங்கி விட்டார்கள். கே. நாயர் இந்தப் பணியில் முன்னணியில் நிற்கிறார் கம்யூனிஸ்டு மந்திரிகள் 25 லக்ஷம் ரூபாயைச் சுருட்டிக்கொண்டதாகவும், தேவிகுளம் பீர்மேட்டுபகுதிகளில் மந்திரிகள் முகாம் செய்து தேர்தல் வேலைகள் செய்து வருவதாகவும், இந்திரா காந்தி கூட்டத்தில் கலாட்டா செய்ததாகவும் பொய்யும் புரட்டும் பேசி அவதூறுகளில் இறங்கியிருக்கிறார்கள்.

தினத் தந்தியில் வந்த அருவருக்கத்தக்க பொய்ச் செய்தியை—அதாவது, "கேரளத்தில் வாழும் தமிழர்கள் மலையாளத்திலேயே பேசி, மலையாள கலாச்சாரத்தை ஏற்றுக்கொண்டு, மலையாளிகளாக மாறிவிட வேண்டுமென்றும், இல்லாவிட்டால் தமிழர்கள் அழிவது நிச்சயம் என்றும், திருவனந்தபுரத்தில் ஒரு சந்திலே ஒரு திருநெல்வேலி உண்டாக்கவா பார்க்கிறீர்கள்!" என்று கேரள அமைச்சர் கிருஷ்ணய்யர் ஒரு கூட்டத்தில் பேசியதாக வெளிவந்த பச்சைப் புளுகை, காங்கிரஸ் கட்சியானது அப்படியே ஒரு நோட்டீஸில் அச்சடித்து, கட்டபொம்மன் பிறந்த திருநெல்வேலி ஜில்லாவை அவமானப்படுத்திய கம்யூனிஸ்டுகளுக்கு ஓட்டுப்போடாதீர், தமிழர்களை அழிக்க முற்படும் கம்யூனிஸ்டுகளுக்கு ஓட்டுப் போடாதீர்கள் என்று காங்கிரஸ் கட்சி ஏராளமாக நோட்டீஸ்கள் வெளியிட்டுள்ளன.

ஆனால் மூனாரில் தமிழர் கடைகளை காங்கிரஸ் பனம்பள்ளி சர்க்கார் இடித்ததையும் கம்யூனிஸ்ட் சர்க்கார் அவற்றைக் கட்டிக்கொடுப்பதையும் கண்ணன் தேவன் கம்பெனியின் இடங்களை 200ஏக்கர் வாங்கி தமிழர்களுக்கு வீடு கட்டிக்கொள்ள புதிதாக வசதி செய்து கொடுத்திருப்பதையும், இதுவரை தமிழ் உபாத்தியாயர்கள் இல்லாத பள்ளிக்கூடங்களிலெல்லாம் தமிழ் உபாத்தியாயர்களை நியமித்ததையும் தேவிகுளம் மக்கள் நேரில் பார்த்திருப்பதால் இந்த இனவெறிப் பிரச்சாரம் எடுபடவில்லை.

### ஒற்றுமை அதிகரிக்கிறது

தொழிலாளிகள் இந்த பொய்களை நம்புவதில்லை அவதூறுகளைக் கண்டு வெறுக்கிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சியை மட்டரகமாகத் திட்டிப் பேசினால் ஆத்திரப்படுகிறார்கள். தோட்டத் தொழிலாளர் வசிக்கும் பகுதிகளிலெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டங்களும் தோழர்கள் திருமூர்த்தி, அப்பு கலா நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. தோட்டப் பகுதிகளில் உற்சாகமும் ஒற்றுமையும் உண்மை உணர்தலும் அதிகரித்து வருகிறது.

### பண மூட்டைகள்

இதுவொரு புறமிருக்க, பணத்தையும் அள்ளி விட்டு ஓட்டுப் பிடிக்கலாமென்ற முயற்சிகளை ஆரம்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு தோட்டங்களுக்கும் பண மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு வந்து, எங்கெந்த ஆட்கள் ஏஜெண்டுகளாகக் கிடைப்பார்கள் என்று நோட்டம் பார்த்து வருகிறார்கள்.

தமிழ் நாட்டிலிருந்து சென்னை முதலமைச்சர் காமராஜரும், கோவை முதலாளிகள் பலரும், கேரளத்தில் 30 ஆயிரம், 40 ஆயிரம் ஏக்கரா ஏலத் தோட்டங்களுக்குச் சொந்தக்காரர்களாக இருக்கும் தமிழ் முதலாளிகள் பலரும் நேரடியாகவும், மறைமுகமாகவும் தம் ஏஜெண்டுகளை பணமூட்டைகளோடு அனுப்பியும் வருகிறார்கள். இங்கு காமராஜர் வந்து, தன் தமிழ்நாட்டு தேர்தல் அனுபவங்களையும் வித்தைகளையும் செய்ய முற்பட்டிருக்கிறார். இதனால், மக்கள் மத்தியிலே ஆத்திரமும் அருவருப்பும் அதிகரித்து வருகின்றன. கேரளத் தேர்தலுக்கு கேரள மந்திரிகளைக் காணோம், சென்னை ராஜ்ய மந்திரிகளுக்கு இங்கு என்ன வேலை என்று ஆத்திரத்துடன் கேட்கிறார்கள். முதலாளிகளும் பணக்காரர்களும் புதுப் புதுக் கார்களை கேரளத்திலிருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் அனுப்பியுள்ளார்கள்.

இவ்வளவு இருந்தும் தொழிலாளர்களை அசைக்க முடியாது என்ற அளவில் தொழிலாளிகள் உறுதியாக இருக்கிறார்கள். எல்லாத் தோட்டங்களிலும் ரோஸம்மா புன்னூஸின் போஸ்டர்களை வாங்கிப்போய் ஒட்டுகிறார்கள். செங்கொடி கூட்டங்களும் கலை நிகழ்ச்சிகளும், வீட்டுக்கு வீடு பிரச்சாரமும் தீவிரமாக இருக்கின்றன. காங்கிரஸ்காரர்கள் பணத்தை மட்டுமே நம்பிக்கிடக்கிறார்கள்.

## . . , தேர்தல் பிரச்சாரம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மும் ஒழுங்கும் குலைந்துவிட்டதென்று கூறுகிறார்களே?

பதில்: இவ்வாறு கூறுபவர்கள் கேரளத்தில் மக்களிடம் சென்று இதைப்பற்றிக் கேட்கட்டும். மக்கள்தான் சிறந்த நீதிபதிகள்.

சட்ட சபையிலுள்ள கட்சிகளின் பலத்தைக் குறிப்பிட்டு கோவிந்த நாயர் பேசுகையில், ஒருக்கால் தேவிகுளத்தில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் வெற்றி பெறாத நிலைமை ஏற்பட்டாலும், அப்பொழுதுகூட எங்களுக்கு சட்டசபையில் ஒரு ஓட்டு மெஜாரிடி இருக்கும், என்று கூறினார்.

கேள்வி: காங்கிரஸின் பலம், பொதுத் தேர்தலுக்குப் பிறகு கேரளத்தில் அதிகரித்திருப்பதாக தேபர் கூறுகிறாரே?

பதில்: உண்மை இதற்கு மாறானது. கேரளத்திற்கு சென்று பார்க்கும் எந்த நடுநிலைமையானரும், கம்யூனிஸ்ட் கட்சியின் செல்வாக்கு அதிகரித்துள்ளது என்றுதான் கூறுவார்.

காங்கிரஸ் — பி. சோ.—முஸ்லிம் லீக் கூட்டணியைப் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. மத்திய, இதர ராஜ்ய காங்கிரஸ் மந்திரிகள் வருவது பற்றியும் நாங்கள் கவலைப்படவில்லை.

## நடக்க இருப்பவை

### தோழர் கே. டி. கே.

தோழர் கே டி. கே 9-ந் தேதி சென்னை வருகிறார். 10-ந் தேதி சென்னை ஜெனரல் போஸ்ட் ஆபீஸ்—பி. அன் டி. தொழிலாளர் மகாநாட்டில் பேசுகிறார்.

11-ந் தேதி மதுரை வந்து, அன்று மாலை பீர்மேடு செல்கிறார்.

8-5-58 கோம்பை – வி. மதனகோபால் பேசுகிறார்.

# தமிழ்நாடெங்கும் மேதின விழா

## தொழிலாளர் ஒற்றுமை அணிவகுப்புகள்

### மே தினத்திற்கு சம்பளத்துடன் விடுமுறை தரக் கோரிக்கை

சென்னை, மே 3—

இவ்வாண்டு மே தினம் தமிழகமெங்கும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பல ஊர்களில் பிரம்மாண்டமான அணிவகுப்புகளும், பொதுக்கூட்டங்களும் நடைபெற்றன. தொழிலாளர்களோடு பாங்கி, தபால்-தந்தி, இன்ஷூரன்ஸ் இன்னும் பல மத்தியதர வர்க்க சங்கங்களின் ஊழியர்கள் தோளோடு தோள் இணைந்து உரிமைக் கோஷம் முழங்கி ஊர்வலம் சென்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

#### சேலம்

சேலம் நகரில் மேதின விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. நகரெங்கும் செங்கொடி தோரணத்தால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. மூன்று ரோடு அரிசிப்பாளையம், ராமையாபுரம் 4, 5, 6, 7-வது வார்டுகள். அன்னதானப்பட்டி, குகை, கோட்டை, கருங்கல்பட்டி, அம்மாப்பேட்டை, காட்டூர், சீர்நாயக்கம்பட்டி ஆகிய இடங்களில் செங்கொடி ஏற்றி வைக்கப்பட்டன.

மாலையில் மேளதாளங்கள் பலவித வேஷங்கள், ரதங்களோடு ஒரு பெரிய ஊர்வலம் நடைபெற்றது. பின்னர் போஸ் மைதானத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கே. செல்லப்பன், ஜி. சாமுவேல் முதலியோர் பேசினர். எஸ். ரமணி தலைமை வகித்தார்.

#### கிருஷ்ணகிரி

மே திருநாளை ஒட்டி கிருஷ்ணகிரி ஜனசக்தி புத்தக நிலையம் பிரமாதமாக அலங்காரம் செய்யப்பட்டு, செங்கொடி ஏற்றுவிக்கப்பட்டு, லெனின், ஸ்டாலின், ப. ஜீவானந்தம், நம்பூதிரிப்பாட் ஆகியவர்களின் படத்திற்கு மாலை அணிவிக்கப்பட்டு வணக்கம் செலுத்தப்பட்டது. அன்று 500 பேர்களுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

#### திருப்பூர்

மே தினத்தை ஒட்டி நகரிலும் சுற்றுப்புறங்களிலும் 100-க்கு அதிகமான செங்கொடிகள் ஏற்றி வைக்கப்பட்டன. பின் மாலை 3 மணிக்கு மேல் நல்லூர் பிரதேசம், கோட்டைக்காடு, ஆண்டிப்பாளையம், கருவம் பாளையம், வேலம்பாளையம், அனுப்பாபாளையம் முருங்கப்பாளையம், ஓடக்காடு, சாம்பக்காடு, ராம நகர், முத்து நகர், ஆணைக்காடு, நல்லாத்துப்பாளையம், வாலிபாளையம் முதலிய பகுதிகளிலிருந்தும், மில், பனியன் தொழிற் சாலைகள், அரிசி மில், முனிசிபல், சாக்குத் தையல், ஓட்டல், பாத்திரம் ஆகிய தொழிற் சாலைகளிலிருந்தும் ஏராளமான தொழிலாளர்கள் தாரை தப்பட்டை, செண்டை, கொம்பு முழங்க. புலிவேஷம் பொய்க்கால் குதிரை முதலிய வேஷங்களுடன் பெரிய ஊர்வலம் புறப்பட்டு நகரின் முக்கிய தெருக்களில் ஊர்வலம் வந்து ராயபுரம் மைதானத்தில் முடிவடைந்தது. அங்கு தோழர் ஏ. கணபதி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் என். கே. பழனிச்சாமி எம்.எல்.ஏ., வி. பொன்னுலிங்கம் ஆகியோர் பேசினர்.

#### குளித்தலை

குளித்தலை பிர்க்கா தண்ணீர் பள்ளி, குமாரமங்கலம், மருதூர் ஆகிய கிராமங்களிலும் குளித்தலை நகரிலும் பல இடங்களில் தோழர் கருப்பையா செங்கொடிகள் ஏற்றி வைத்தார். எல்லா இடங்களிலும் இனிப்புகள் வழங்கப்பட்டன.

#### நெல்லிக்குப்பம்

நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலைத் தொழிலாளர் சங்கம் மே தினத்தை ஒட்டி நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. மாலை 3-30 மணிக்கு ஒரு பெரிய ஊர்வலம் பலவித கேளிக்கை விளையாட்டுகளுடன் புறப்பட்டு, நகரையேபிரமிப்பில் ஆழ்த்தி, இரவு 7மணிக்கு சர்க்கரை தொழிலாளர் சங்கத் திடலை அடைந்தது. சங்கத் தலைவர் சி. கோவிந்தராஜன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில பக்கிரிசாமி, வெங்கடாசலம், வீராசாமி, பஞ்சாட்சரம், அப்துல் குத்தூஸ் முதலியவர்கள் பேசினர்.

#### கடையநல்லூர்

கடையநல்லூர் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மே தின விழாப் பொதுக்கூட்டம் மே 1-ம் தேதி தோழர் எம். எம். அப்துல் கனி தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர் ச. நடராசன், என். சண்முகம் எம். ஏ. பி. எல். ஆகியோர் பேசினர்.

#### பம்பாய்

பம்பாயில் மான்கரடு என்னும் பகுதியில் ஜனதா காலனியில் சகல கட்சியினரும் ஒன்றுசேர்ந்து மேதின விழாவைக் கொண்டாடினர். தமிழ்ச் சங்கத் தலைவர் ஆர். எஸ். முத்துக்கிருஷ்ணன் தலைமை வகித்தார். தோழர்கள் கே. ஆர். துப்கர், குல்கர்னி, திராவிட கழகத் தலைவர் அந்தோணி ஆகியோர் பேசினர். தோழியர் ரீடா கொடியேற்றி வைத்தார். குழந்தைகளுக்குத் தின்பண்டம் வழங்கப்பட்டது.

#### கவுந்தப்பாடி

கவுந்தப்பாடியில் மே தினத்தை முன்னிட்டு பல இடங்களில் செங்கொடிகளை கே. கே. கந்தசாமி ஏற்றிவைத்தார். கவுந்தப்பாடியை அடுத்த கூலங்கபாளையத்தில் கே. கே. உசேன் தலைமையில் மே தினம் நடைபெற்றது. தோழர்கள் கே. கே. கந்தசாமி, கே. கே. என். மூர்த்தி ஆகியோர் பேசினர். எஸ். ஏ. நாச்சிமுத்து செங்கொடி ஏற்றிவைத்தார்.

#### வால்பாறை

ஆனைமலைத் தோட்டத் தொழிலாளர் சங்க சார்பில் மே தின விழா வால்பாறையில் விமரிசையாக நடைபெற்றது. பல இடங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. மே தினத்திற்கு முதலாளிகள் ரஜா விடாதிருந்தும் தொழிலாளர்கள் விடுமுறை அனுஷ்டித்து விழாவில் கலந்து கொண்டனர். பின்னர் தாரை தப்பட்டைகள் முழங்க 5000 பேர்கள் கொண்ட ஒரு பெரிய ஊர்வலம் நடைபெற்றது. ஸ்டாப் கிளப் மைதானத்தில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் ராஜய்யா, வெள்ளைச்சாமி, கிருஷ்ணன், ஆல்பர்ட் ஆகியோர் பேசினர். ஏ. ஜே. கருப்பையா தலைமை வகித்தார். கூட்டத்தில் 7 ஆயிரத்துக்கு அதிகமான மக்கள் வந்திருந்தனர்.

#### பல்லடம்

மே தினத்தன்று காலையில் பல இடங்களில் கொடியேற்று விழாவும், மாலையில் ஊர்வலமும் நடைபெற்றன.

தோழர் டி. எஸ்.பொன்னுசாமி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பி. என். சின்னையன், பி. ஆர். பழனிசாமி, ஆர். ராமசாமி, எஸ். கருப்பகவுண்டர், ஆர். நஞ்சப்பன் ஆகியோர் மேதின வரலாறு பற்றியும், இன்றைய அரசியல் நிலைமைகளைப்பற்றியும் பேசினர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

#### கும்பகோணம்

கும்பகோணம் இரண்டாவது வட்டக்கிளை சார்பில் மேலக் காவேரி கடைத் தெருவில் மே தினத்தை முன்னிட்டு தோழர் ஏ. எம். கோவிந்தராஜன் செங்கொடி ஏற்றினர்.

## பிராவிடெண்ட் பண்டு திட்டத்தில் சர்க்கார் தொழில்களும் சேரும்

### சகல சிறு தொழில்களையும் சேர்க்க கே. டி. கே. தங்கமணி வற்புறுத்தல்

புதுடெல்லி, மே 5—

தொழிலாளர் பிராவிடெண்ட் நிதி (திருத்தச் சட்டம்) இன்று பாராளுமன்றத்தில் நிறைவேறியது

இதுவரை தனிப்பட்டோரால் நடத்தப்படும் சில தொழில்களுக்கு மட்டுமே இன்று இருந்து வரும் பிராவிடெண்ட் நிதிச் சட்டம் பொருந்துவதாக இருந்தது. இப்பொழுது கொண்டுவரப்பட்டுள்ள திருத்தத்தின் மூலம் இச்சட்டம் தனியார் துறையிலுள்ள சகல தொழில்களுக்கும் இச்சட்டம் பொருந்துவதோடு, அரசாங்கத்தாலும் ஸ்தல ஸ்தாபனங்களாலும் நடத்தப்படும் தொழில்களுக்கும் இச்சட்டம் பொருந்தும் என்று புதிய திருத்தச் சட்டம் கூறுகிறது.

இந்த மசோதாவின் மேல் பேசிய கம்யூனிஸ்ட் எம். பி தோழர் கே. டி. கே. தங்கமணி, அரசாங்கம் இத்தகைய அரைகுறை மசோதாக்களைக் கொண்டு வந்தது சரியல்ல என்றார். பூர்வாம்சமுள்ள மசோதா ஒன்று கொண்டுவர வேண்டுமென்றும், அதில் சிறு தொழில்களும் சேர்க்கப்படுவதுடன், பல்வேறு தொழிலாளர் ஸ்தாபனங்களாலும் மகாநாடுகளாலும் தரப்பட்ட ஆலோசனைகளும் ஏற்கப்படவேண்டுமென்றும் தோழர் தங்கமணி வற்புறுத்தினர்.

பிராவிடெண்டு நிதிக்கு சர்க்காரால் தரப்படும் பங்கு 6¼ சத விகிதத்திலிருந்து 8⅓ சதவிகிதமாக உயர்த்தப்படவேண்டுமென்று வற்புறுத்தினர். சர்க்காரின் வீடு கட்டும் திட்டத்தின் பலனைத் தொழிலாளர்களும் அனுபவிக்க, பிராவிடெண்ட் நிதியிலிருந்து தொழிலாளர்கள் கடன்வாங்கிக் கொள்ள அனுமதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர் இந்த மசோதாவில் போக்கு வரத்துத் தொழிலாளர்களும் சேர்க்கப்படவேண்டுமென்று வற்புறுத்தினர்.

முதலாளிகள் தேசபக்தியுள்ளவர்களாக இருக்க வேண்டுமென்றும், இந்த நிதி நிர்ப்பந்தமாகச் சேர்க்கப்பட்டநிதி என்றும், இது திட்டத்திற்காகசரியானவிதத்தில் உபயோகிக்கப்படக்கூடியது என்றும் கூறினர்.

அமைச்சர் பதிலளிக்கையில், ஏனைய சிறிய தொழில்களும் இந்தச் சட்டத்தின்கீழ் சீக்கிரமே சேர்க்கப்படும் என்றார்.

### சேலம் பீடித் தொழிலாளர் சங்க விலாச மாற்றம்

சேலம் ஐக்கிய பீடித்
தொழிலாளர் சங்கம்,
32-F, பிரஸ் ரோடு,
சேலம்—1. என்ற

முகவரிக்கு காரியாலயம் மாற்றப்பட்டுள்ளதால் இனி தபால்கள் எழுதும் தோழர்கள் மேலே கண்ட முகவரிக்கு எழுதுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். ரமணி,
காரியதரிசி,

## சௌராஷ்டிராவில் எண்ணெய் கம்பெனி நடத்த பிர்லா முஸ்தீபு

### இதற்கு தேபர் ஆதரவு உண்டாம்

#### தனியார் துறைக்குவிட சர்க்கார் ஆட்சேபம்

புதுடெல்லி, மே 2—

சௌராஷ்டிராவில் பவநகர் என்னுமிடத்தில் எண்ணெய்க் கம்பெனி நடத்த பிர்லா பிரதர்ஸ் கம்பெனி தயாராக முஸ்தீபுச் செய்து வருவதாகத் தெரிகிறது.

இந்தத் தொழிற்சாலையில் வருடத்திற்கு 12 லட்சம் டன் எண்ணெய் சுத்தம் செய்யப்படும். 1955-ல் இதை நஸர்வஞ்சி தின்ஷா என்பவர் நடத்த முன்வந்தார். கிரப்ஸ் கம்பெனி என்ற ஒரு பிரெஞ்சுக் கம்பெனி உதவி தர உறுதியளித்தது. ஒரு கோடி ரூபாய் வரை மூலதனம் போட முன் வந்தது.

தேசிய இரானியன் ஆயில் கம்பெனி ஒரு கட்டத்தில் மூன்று கோடி ரூபாய் மூலதனம்போடத் தயாராக இருந்ததாம். பிர்லா கம்பெனி இந்தத் திட்டத்தில் முதல்போட்டுத் தனியார் துறையில் நடத்த முன்வந்துள்ளது. இதற்கான மொத்தச் செலவு 12 கோடி ரூபாயாகும்.

இந்தத் திட்டத்தை அனுமதிக்கும்படி கோரி கடந்த மூன்றாண்டுகளாக மத்திய சர்க்காரிடம் மகஜர்கள் குவிந்துள்ளன. சௌராஷ்டிர சர்க்கார் பல்வேறு உதவிகளைப் புரிந்துள்ளது.

காங்கிரஸ் அக்ராசனரும், முன்னாள் சௌராஷ்டிரா முதலமைச்சருமான யூ. என். தேபர் பிர்லா கம்பெனி இத்திட்டத்தை எடுத்து நடத்துவதை ஆதரிக்கிறார் என்று தெரிகிறது.

ஆனால் மத்திய சர்க்கார் எண்ணெய்ச் சுரங்க இலாகா மந்திரி காரியாலயம் இதுவரையில் இதற்கு அனுமதியளிக்கவில்லை. தமது தொழில் கொள்கைத் தீர்மானப்படி தனியார் துறையில் எண்ணெய்த் தொழில் தொடங்குவதற்கு அனுமதியளிப்பது கூடாது.

என்றாலும் மக்கள் சபையில் நிர்ணயக்குழு இந்தத் தொழிற்சாலை தனியார் துறையில் நடத்தலாம் என்று சிபார்சு செய்திருக்கிறது. இதன்விளைவாக சர்க்கார் கொள்கையை மாற்றிக்கொண்டு தனியார் துறைக்கே இத்தொழிற்சாலையை நடத்த அனுமதி கொடுத்துவிடுமா என்பது பற்றி முடிவாக ஒன்றும் தெரியவில்லை.

இந்தியாவில் பெட்ரோலைவிட டீஸல் எண்ணெய் அதிகமாகத் தேவைப்படுவதால் பெட்ரோல் மட்டும் உற்பத்திசெய்யும் தொழிற்சாலை தொடங்குவதில் மத்திய மந்திரி இலாகாவுக்கு உற்சாகமில்லை. ஐ.பி.ஏ.

## சென்னை நகரில் போலீஸ் அக்ரமங்கள்

சென்னை, மே 5—

சென்னை நகரில் 1-வது வட்டத்தில் காசிபுரத்தில் மீனவர் சமூகத்தைச் சேர்ந்த முத்ரியன் சாராயடின் வைத்திருந்ததை ஒட்டி இராயபுரம் போலீஸார் 4-ந் தேதி காலை கைது செய்துகொண்டு போய் லாக் அப்பில் அடித்ததாகவும், முத்ரியன் அபாயநிலைமையில் இருப்பதாகவும் நேற்று இரவு 9-15 மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்திற்கு செய்தி கிடைத்தது. கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஏ. எஸ். கே. இராயபுரம் போலீஸ் ஸ்டேஷன் சப் இன்ஸ்பெக்டர் பிரின்சை நேரில் கண்டு பேசியபின் முத்ரியனை போலீஸ் லாக் அப்பில் தோழர்கள் ஏ. எஸ். கே.யும் வட சென்னை ஏரியா கமிட்டி அங்கத்தினரும் 1-வது வட்டக் கிளைச்செயலாளருமான தோழர் நமசிவாயமும் பார்த்துவிட்டு வந்தனர். போலீசார் முத்ரியனை பலமாக தடியால் அடித்திருப்பது தெரியவந்தது. முத்ரியன் உடம்பு வீங்கி இருந்தது. முத்ரியனை தெருவில் கைது செய்து அடித்ததை மக்கள் பார்த்தனர்.

மதுவிலக்குபற்றி போலீசார் சாராயம் காய்ச்சுவோர், விற்போர், குடிப்போர்மீது சட்டப்படி நடவடிக்கை எடுப்பதற்குத் தடை இல்லை. ஆனால் கண்டபடி அடிப்பதை, கோடம்பாக்கம் சம்பவத்திற்குப் பிறகுகூட போலீஸார் நிறுத்தாதிருப்பதைக் கண்டிக்கின்றோம்.

முத்ரியனை பலமாக அடித்திருக்கும் போலீசாரை விசாரித்து, போலீஸ் கமிஷனர் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பதைச் சுட்டிக் காட்டுகின்றோம்.

கோடம்பாக்கம் மர்ம மரண விசாரணை முடிந்து ரிப்போர்ட்டும் சர்க்காருக்கு சமர்ப்பிக்கப்பட்டிருந்தும், சப் இன்ஸ்பெக்டர் நடராஜன் மற்றும் சம்பந்தப்பட்ட போலீசார் சஸ்பெண்டுகூட செய்யப்படாமலிருப்பதால் பெரும் அதிருப்தி மக்கள் மத்தியில் காங்கிரஸ் சர்க்காரிடத்தில் இருப்பதையும் சுட்டிக்காட்டுகிறோம்.

கே. முருகேசன்,
காரியதரிசி,
இ. கம்யூனிஸ்ட் கட்சி,
சென்னைக் கமிட்டி.

## மாதவரத்தில் மக்கள் ஊழியர் மன்றம்

மாதவரம், மே 5—

சைதாப்பேட்டைத் தாலூகா மாதவரம் கிராம திருவள்ளுவர் வீதியில் மேற்படி கிராம பிரமுகர்கள் கூட்டம் ஒன்று 3 5-58 சனி மாலை 5 மணியளவில் திரு. சி. கே. மாதவன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் 45 பேர் கலந்து கொண்டு கிராமத்தின் சகல தேவைகளையும் நியாயமான முறைகளில் பெற தொண்டுசெய்யும் முறையில் ஒரு ஸ்தாபனம் அவசியம் என அங்கீகரிக்கப்பட்டு "மாதவரம் மக்கள் ஊழியர் மன்றம்" என்னும் பெயரில் ஒரு அமைப்பை நிறுவியபின்னர் கீழ்க்கண்ட நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர் சி. கே. மாதவன், துணைத் தலைவர் ந. கணேசன், செயலாளர் திரு. ஞா. ந. சாரம வேல், துணைச் செயலாளர் திரு. தி பெ. ராஜகோபால், பொருளாளர் க. கோபால்.

மற்றும் 10 செயற்குழு உறுப்பினர்கள் தெரிந்தெடுக்கப்பட்டு தலைவரின் நன்றியுரைக்குப் பின்னர் கூட்டம் இனிது முடிவுற்றது.

# தேபர்ஜிக்கு மார்க்ஸிஸம் புரியுமா?

## அஜய், ரணதிவே விளக்கவுரை

### ஸ்தாபனம் பற்றிய முடிவுகள் அமிருதசரஸ் கம்யூனிஸ்ட் மாநாடு-5

சமாதான முறைகளிலேயே சோஷலிஸத்தை அடைய கம்யூனிஸ்ட் கட்சி முயலுகிறது; அரசியல் சட்டத்தின் அடிப்படையில் இயங்கும் எதிர்க்கட்சிகளுக்கும் கம்யூனிஸ்டுகள் அமைக்க விரும்பும் சோஷலிஸத்தில் இடமுண்டு என்று அமிருதசரஸில் கம்யூனிஸ்டுக் கட்சி எடுத்த முடிவு கம்யூனிஸ்டு எதிர்ப்பாளருக்கு குறிப்பாக காங்கிரஸ் தலைவர் தேபர், ஸ்ரீமன் நாராயணன் போன்றவர்களுக்குப் பெரும் கலக்கத்தை உண்டுபண்ணியிருக்கிறது.

சமாதான முறைகள் மார்க்ஸிய அகராதியிலேயே இல்லையே, கம்யூனிஸ்டுகள் கூறுவதை எவ்வாறு நம்புவது என்று தேபர்ஜி கேட்டார். இவ்வாறு கேள்வி கேட்டதின் மூலம் மார்க்ஸிஸத்தில் அவருக்குப் பூரண ஞானம் இருப்பதாகப் பாவனை செய்தார்.

சமாதான முறைகளைப் பற்றிய அமைப்பு விதிகளின் முன்னுரை விவாதிக்கப்பட்டபோது தோழர்கள் அஜய்கோஷும், பி. டி. ரணதிவேயும் ஏன் இத்தகைய முடிவிற்கு இந்தியக் கம்யூனிஸ்

செயலாளர்: ப. ஸி. ஜோஷி

டுக் கட்சி வந்தது என்ற கேள்விக்கும், மார்க்ஸியப் பார்வைக்கும் சமாதான முறைக்கும் முரண்பாடுண்டா என்ற கேள்விக்கும் தக்க பதில் அளித்தனர்.

#### புதிய சகாப்தம்

உலகமெங்கும் சமாதான, ஜனநாயக சோஷலிஸ சக்திகள் மகத்தான பலம் பெற்றுள்ளதையும் அது இந்திய நிலைமையில் பிரதிபலிப்பதையும் விளக்கினர். ஏகாதிபத்தியப் பிற்போக்கு சக்திகள் இன்று பிற நாடுகளின் உள் விவகாரங்களில் முன்காலத்தைப் போலப் பகிரங்கமாக ஈடுபடமுடியாதிருக்கும் புதிய சூழ்நிலையில் வாழ்கிறோம். எகிப்திலும், சிரியாவிலும், இந்தோனீசியாவிலும் தலையிட்ட அவர்களை புறமுதுகு காட்டி ஓடச் செய்யும் வல்லமை உலக ஜனநாயக, சுதந்திர சக்திகளுக்கு உண்டு. இது உலகில் இன்று ஏற்பட்டுள்ள புதியதோர் நிலைமை.

#### அன்று நிலைமை வேறு

இரண்டாவது, பல தேசங்களில் இன்று ஜனநாயக சக்திகளின் மகத்தான வளர்ச்சியின் காரணமாக ஆட்சிபீடத்திலுள்ள பூர்ஷுவா வர்க்கம் ஜனநாயக உரிமைகளை மக்களுக்கு அனுமதிக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளது. இதை ஆளும் வர்க்கத்தை எதிர்க்கும் பாட்டாளி வர்க்கம் நிச்சயம் உபயோகப்படுத்திக் கொள்ள முடியும். இத்தகையதொரு நிலைமை இன்று இந்தியாவிலுள்ளது.

மூன்றாவது, மார்க்ஸிஸ்டுகள் இடம், காலம், சூழ்நிலைமையைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாத வரட்டுத் தத்துவ வாதிகளல்ல ரஷ்யாவிலோ, சீனாவிலோ அன்று அதிகாரத்தை நேரடியாகக் கைப்பற்ற தொழிலாளி வர்க்கம் முன்வரவேண்டிய நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம், அன்று இருந்த நிலைமைதான். ரஷ்யாவில் ஜாராட்சியும், அதற்குப்பின்வந்த கெரன்ஸ்கி ஆட்சியும் எதிர்க்கட்சிகளை அடக்கி ஒடுக்கியது மட்டுமல்லாமல், உணவும் சமா

செயலாளர்: டாங்கே எம்.பி.,

தானமும் கோரிய மக்களையும் தொழிலாளர்களையும் நீசத்தனமாகச் சுட்டுக் கொன்றனர். அதனால்தான் நமது தமிழ்நாட்டு தேசியக் கவி சுப்ரமண்ய பாரதி, "இம் என்றால் சிறைவாசம் ஏன் என்றால் வனவாசம்; இவ்வாறங்கே, செம்மை எல்லாம் பாழாகிக் கொடுமையே அறமாகித் தீர்ந்தபோதில், அம்மை மனங் கனிந்திட்டாள்" என்று பாடி ஜாரரசனின் கொடுங்கோல் மக்களால் ஒழிக்கப்பட்டதை வரவேற்றார்.

இதேபோல் அமெரிக்காவின் கையாளாக மாறிவிட்ட சியாங்கின் கொடுங்கோலை ஒழிக்க அங்குள்ள மக்களுக்கு எவ்வித ஜனநாயக உரிமையும் அறவே இல்லாத நிலைமை ஏற்பட்டுவிட்டதால்தான், சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் சீனமக்கள் ஆயுதமேந்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

ஆனால் இன்று உலகில் ஏற்பட்டுள்ள மாறுதல்களின் காரணமாக ஜனநாயக உரிமைகளை அடைந்துள்ள இந்தியாபோன்ற பல நாடுகளில் சமாதான முறைகளில் சோஷலிஸத்தை அடையும்வாய்ப்புகள் உள்ளன. தொழிலாளி

செயலாளர்: புபேஷ்குப்தா எம்.பி.,

வர்க்கம் விவசாயிகளுடன் இணைந்துநின்று பரந்த, வெகுஜன இயக்கத்தை வளர்த்து, பாராளுமன்றத்தில் மெஜாரிடி ஸ்தானங்களை அடைந்து அதை சோஷலிஸ மாறுதலுக்காக உபயோகப்படுத்த முடியும்.

இத்தகைய வாய்ப்பு இருக்கும்போது, தொழிலாளிவர்க்கம் இதைப் பயன்படுத்த முன் வருவதே சரியான வழி.

தொழிலாளிவர்க்கமும் உழைக்கும் மக்களும் தமது ஒருசொட்டு ரத்தத்தையேனும் அவசியமின்றி சிந்துவதை என்றுமே விரும்பியதில்லை. இதை மார்க்ஸும் எங்கல்சுமே அவர்கள் காலத்தில் அங்கீகரித்தனர் என்று தோழர் அஜய்கோஷ் தெளிவாக எடுத்துக் காட்டினார்.

#### மார்க்ஸ் கூறியது

1872-ல் ஆம்ஸ்டர்டம் என்ற இடத்தில் பேசிய காரல் மார்க்ஸ், தொழிலாள வர்க்கம் அதிகாரத்தை அடைவது பற்றிய இதே பிரச்சினைபற்றிக் குறிப்பிட்டார்:

"ஒரே விதமான முறைகளின் மூலம்தான் நாம் இந்தக் குறிக்கோளை அடைய முடியுமென்று நாங்கள் வலியுறுத்தி என்றுமே கூறியதில்லை.

"பல்வேறு தேசங்களிலுள்ள அமைப்பு முறைகள், பண்பாடுகள் பழக்க வழக்கங்களைக் கணக்கிலெடுத்துக்கொள்ள வேண்டுமென்பதை நாங்கள் அறிவோம். அமெரிக்கா, பிரிட்டன் போன்ற தேசங்களில் தொழிலாளர்கள் சமாதான முறைகளில் தங்கள் குறிக்கோளை அடைய முடியும் என்பதை நாங்கள் அறிவோம். உங்களது நாட்டின், ஹாலந்தின் பண்பாடுகளையும் அமைப்புமுறைகளையும் நாங்கள் உணர்ந்திருந்தால், மேற்கூறிய நாடுகளுடன் உங்கள் நாட்டையும் நான் சேர்க்கமுடியும்" என்று பேசி இருக்கிறார்.

மார்க்ஸ் அன்று பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் இருந்த ஜனநாயக உரிமைகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு அவ்வாறு பேசினார். மார்க்ஸிஸத்திற்கும் சமாதானமுறைகளுக்கும் சம்பந்தமில்லை எனக்கூறிய தேபர் அவர்கள் இதைப் படிப்பாரா என்று வினவுகிறோம்.

#### எச்சரிக்கை

தோழர் ரணதிவேபேசுகையில்

செயலாளர்: பி. டி. ரணதிவே

இரு தவறான போக்குகள்பற்றி எச்சரித்தார்.

பிற்போக்கு சக்திகளை எதிர்த்து நடக்கும் மக்களது நல்வாழ்வுப் போராட்டங்களின், இயக்கங்களின் முக்கியத்துவத்தை மறந்து அல்லது பிரதான பங்கை உணராது சட்டசபைகளிலும், பார்லிமெண்டிலுமே மூழ்கி மூழ்கிவிடும் பார்லிமெண்டேரியனிசப்-போக்கு ஒன்று. மற்றது இன்றுள்ள சட்டபூர்வமான ஜனநாயக சாத்தியப்பாடுகளை உபயோகிக்க மறுக்கும் போக்கு. இரண்டும் தவறான போக்குகள். சட்டசபைகளையும் சட்டபூர்வமான புதிய சாத்தியப்பாடுகளையும் மக்கள் இயக்கத்தையும் சரியானவிதத்தில் இணைத்துச் செல்லும்பாதையையே கட்சியின் அமைப்பு விதிகளின் முன்னுரை வற்புறுத்துகிறது என்றார்.

#### இ. எம். எஸ். விளக்கவுரை

கட்சியின் அமைப்பு விதிகளைப் பற்றிய விவாதம் முடிந்த பிறகு தோழர் இ. எம். எஸ். கேரளத்தில் ஓராண்டில் கம்யூனிஸ்டுக் கட்சிக்குக் கிடைத்த அனுபவங்களைப் பற்றிப் பேசினார். தோழர்

செயலாளர்: ஏ. கே. கோபாலன் எம்.பி.,

இ. எம். எஸ். பேச எழுந்ததுமே பிரதிநிதிகள் பலத்த நீண்ட கரகோஷம் செய்து வரவேற்றனர். ஓராண்டு சாதனைகள் கேரள மக்களிடையே புதிய விழிப்பு ஏற்பட்டு கம்யூனிஸ்டுகளைப் பற்றி எதிர்க்கட்சிகளின் விஷயப் பிரச்சாரத்தில் மயங்கிய மக்களிடையே இருந்த சந்தேகங்கள் மறைந்து வருவதுபற்றி குறிப்பிட்டார். எதிர்க்கட்சிகள் அந்த ஆட்சியைக் கவிழ்க்க சகலவிதமான சூழ்ச்சிகளிலும் வெறிச்செயல்களிலும் இறங்குவது மக்களிடையே அவர்களைப் பற்றி

பொதுச்செயலாளர்: அஜய்கோஷ்

பெரும் வெறுப்புத்தான் ஏற்பட்டுள்ளது என்றார். ஒவ்வொரு திட்டத்தையும் நிறைவேற்றுவதிலும், ராஜ்யத்தின் வரவு செலவுகளை நிர்வகிப்பதிலும் மத்திய சர்க்காருக்கு இருக்கும் பிடிப்புப் பற்றி விளக்கி, ராஜ்ய சர்க்கார் மற்றொரு கட்சியினால் நடத்தப்படுவதால் மத்தியிலுள்ளவர்களின் போக்கு ராஜ்யத்தைப் பெரிதும் பாதிப்பதாக இருக்கிறதென்றும், ஒவ்வொரு விஷயத்திலும் உறுதியாகப் போராடவேண்டிய நிலைமை ஏற்படுவதையும் குறிப்பிட்டார். கேரள மக்கள் மட்டுமல்ல, இந்தியாவிலுள்ள சகல ஜனநாயக சக்திகளின் ஆதரவுடன் கேரள ஆட்சி நடப்பதால் மத்திய சர்க்காரோ, எதிர்க் கட்சிகளோ போடும் முட்டுக்கட்டைகளை உடைத்தெறிந்து முன்னேற முடியும் என்றார்.

#### ஸ்தாபன நிலைபற்றி அஜய்

கட்சி ஸ்தாபனத்தின் இன்றைய நிலைபற்றிய ஒரு ரிப்போர்ட்டை தோழர் அஜய் தந்தார். இன்றைய நிலையை விளக்கியபின் சில

செயலாளர்: பசவபுன்னையா எம்.பி.,

முக்கியமான உடனடி கடமைகளை மேற்கொள்ள வேண்டியதின் அவசியத்தை வற்புறுத்தினார்.

ஸ்தாபனத்தைப் பொறுத்தவரையில் தோழர் அஜய் இரு முக்கியமான கோஷங்களை மகாநாட்டின் முன் வைத்தார்.

#### இருபெரும் கடமைகள்

ஒன்று. கட்சி ஸ்தாபனத்தில் உருக்குப் போன்ற கட்டுப்பாட்டை வளர்க்க வேண்டும்.

இரண்டாவது, தனி நபர் போக்குகளை களைந்தெறிய வேண்டும்.

இன்றைய நிலையில் கம்யூனிஸ்டு கட்சி வெகு வேகமாக விரிந்து பரந்து வளர்ந்து அதன் பிரதான அரசியல் கடமைகளை நிறைவேற்ற இந்த இரு முக்கிய கடமைகளை உறுதியுடன் மேற்கொள்ள வேண்டுமென்றார்.

இதுவரை நாம் சாதித்துள்ள மகத்தான சாதனைகள் சென்ற சில ஆண்டுகளால் சாதிக்கப்பட்டவை என்று நினைப்பது தவறு. நமது கட்சி இந்திய நாட்டில் தோன்றிய காலத்திலிருந்து நாம் நடத்திய போராட்டங்களின், மக்களுடன் நாம் கொண்டிருந்த தொடர்புகளின் தியாக உணர்ச்சியுடன் மக்களுக்குச் செய்தசேவைகளின் பலன் இவை.

இன்று கட்சியில் சேர்ந்துள்ள அங்கத்தினரின் எண்ணிக்கையை விட அதன் செல்வாக்கு எத்தனையோ மடங்கு அதிகமாக வளர்ந்துள்ளது.

எண்ணிக்கை அதிகரிப்பதால் மட்டும் நமது கட்சி வளர்ந்துவிடாது. கட்சி உறுப்பினரின் சித்தாந்த அரசியல் மட்டம் போதிய அளவு உயரவேண்டும். ஒரே பொதுவான கண்ணோட்டத்துடன் கட்சியில் ஒருமைப்பாட்டை வளர்க்கவேண்டும் ஒருமைப்பாடுள்ள எண்ணம் செயலுடன் உறுதியான கட்டுப்பாடு வாய்ந்த ஸ்தாபனமாக நாம் வளரவேண்டும். எல்லா மட்டங்களிலும் மக்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டு, மக்களது போராட்டங்களுக்கு தலைமைதாங்கக்கூடிய உறுதியான தலைமையை நாம் வளர்த்தாகவேண்டும். அப்பொழுதுதான் கட்சி வளருகிறது என்று சொல்லமுடியும் என்று தோழர் அஜய் சமர்ப்பித்த ரிப்போர்ட் வலியுறுத்துகிறது.

#### இன்றைய நிலைமை

இக்கடமைகளை நிறைவேற்ற இதுவரை இருந்துவந்த நிலைமை மாறவேண்டும். கட்சியின் மத்திய தலைமையான 'சென்டர்' இன்றிருப்பதுபோல் பலஹீனமாக இருந்தால் முடியாது. ராஜ்யங்களுக்கும் மத்திய ஸ்தாபனத்திற்கும்

செயலாளர்: இஜட். ஏ. அகமத் எம்.பி.,

இன்று மிக மிகப் பலஹீனமான தொடர்பே உள்ளது. பல பிரச்னைகளில் தலைமை வழி கூட்டமுடியாது முடமாகிவிடும் நிலைமை. இதைத் துரிதமாக மாற்றவேண்டும். தங்கள் தங்கள் இஷ்டம் போல போகும் போக்குகள், கீழே இருந்துவரும் ஆலோசனைகளை கவனிக்காத அதிகார வர்க்கப் போக்குகள், இதனால் கட்டுப்பாட்டின்மையும், தனித்தபோக்குகளும் வளருகின்றன—இவைகளையெல்லாம் களைந்தெறிந்து நாம் முன்னேறவேண்டும்.

நம் கட்சி அணிகளும், ஆதரவாளர்களும், கட்சியை ஆதரிக்கும் லட்சோப லட்சக்கணக்கான மக்களும் நம்மேல்மிகப்பெரும்பொறுப்பைச் சுமத்தியிருக்கிறார்கள். நம்மைப்பற்றி மிகுந்த பெருமையும் நம்பிக்கையும் கொண்டிருக்கிறார்கள் என்ற உணர்வு புதிய கடமைகளை நிறைவேற்ற நமக்கு ஊக்கமளிக்கவேண்டும் என்று தோழர் அஜய் கூறினார்.

#### கடமைகள்

இத்துடன் கட்சி ஸ்தாபனம் வளர துரிதமாக நிறைவேற்றப்படவேண்டிய 12 முக்கிய கடமைகளையும் முன்வைத்தார்.

1. உடனடியாக கட்சி உறுப்பினர் அனைவருக்கும் கட்சிக் கல்வி தந்து தோழர்களை வளர்க்கவேண்டும்.

2. சித்தாந்த அரசியல் போதனைதரும் விதத்தில் கட்சியின் மாதாந்திர ஆங்கில இதழை வளர்ப்பதுடன், வார இதழின் தரத்தையும் உயர்த்தவேண்டும்:

3. நல்ல தயாரிப்புகளுடன் தேசிய கவுன்சில், மத்தியநிர்வாகக் கமிட்டி கூட்டங்களை நடத்துவது.

(2-ம் பக்கம் பார்க்க)

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM.